அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா⁴ரதீ விஜயதே நிர்வாணஸௌக்²யப்ரதா³

# श्रीजगद्गुरुग्रन्थमाला

ஸ்ரீ ஜக³த்³கு³ரு க்³ரந்த²மாலா

# ॥ जगन्नाथाष्टकम् ॥

# ஜக³ந்நாதா²ஷ்டகம்

ஸ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்.
1966



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिर्द्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

## பதிப்புரை

ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடாதிபதிகளின் அனுக்ரஹத்தினால் அமைக்கப்பட்ட அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியின் முக்கிய நோக்கம் ஸ்ரீ பகவத்பாதாளின் க்ரந்தங்களை அநுவாதத்துடன் பிரசுரித்து குறைந்த விலையில் எல் லோருக்கும் கிடைக்கும்படி செய்து ஆசார்யாளுடைய உபதேசங்களை எங்கும் பரவ ச்செய்வதே. இந்நோக்கத்துடன் பிரசுரிக்கப்படும் **"ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா"** வின் **'ஜக³ந்நாதா²ஷ்டகம்'** இது.

**'ஜக³ந்நாதா²ஷ்டகம்'** புரீ க்ஷேத்திரத்தில் கோயில் கொண்டுள்ள மூர்த்தி யைப் பற்றியது. அங்கு இப்பொழுதும் நடைபெற்று வருகிற பிரஸித்தமான ரதோத் ஸவத்தை 5வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்.

இந்த ஸ்தோதிரத்திற்கு சிருங்கேரி மடம் ஆஸ்தான வித்வான் வித்யாபூஷணம் ஸ்ரீ **K.S. நரஸிம்ம சாஸ்திரி**கள் பதவுரை, கருத்துரை எழுதித் தந்துள்ளார்கள்.

இந்த ஸ்தோத்திரங்களில் பொதிந்துள்ள கருத்துக்களைத் தெரிந்து பக்தியுடன் பாராயணம் செய்வதால் ஸ்ரீ ஆசார்ய அநுக்ரஹத்துடன் எல்லா அபீஷ்டங்களையும் பெறலாம்.

**K.V. சுப்பரத்னம்**,
பொதுக் காரியதரிசி,
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

॥ श्रीः ॥

॥ ஸ்ரீ: ॥

# ॥ जगन्नाथाष्टकम् ॥

# ஜக³ந்நாதா²ஷ்டகம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் நான்கு திசைகளில் நான்கு ஆம்நாய பீடங்களை ஸ்தாபித்ததும், அங்கு தமது நான்கு சிஷ்யர்களை பீடாதிபதிகளாக நியமித்து அவர்கள் மூலம் குரு பரம்பரையைத் தோற்றுவித்ததும் யாவரும் அறிந்ததே. அவற்றில் கிழக்கு ஸமுத்திரக்கரையிலுள்ள புரீ என்ற ஜகந்நாதக்ஷேத்திரத்தில் பூர்வாம்நாய பீடமாகிய கோவர்த்தன பீடத்தை ஸ்தாபித்தார். இங்கு கோயில் கொண்டுள்ள ஸ்ரீ ஜகந்நாத பகவானின் பேரில் ஆசார்யாளால் இயற்றப்பட்ட ஸ்தோத்ரம் தான் ஜகந்நாதாஷ்டகம் என்பது. இது எட்டு சுலோகங்கள் கொண்டது. இங்கு நடை பெறும் ஸர்வப்ரஸித்தமான ரதோத்ஸவத்தை 5-வது சுலோகத்தில் குறிப்பிடுகிறுர். இந்த க்ஷேத்ரம் நீலாத்ரி என்றும் சொல்லப்படுகிறது. ஒவ்வொரு சுலோகத்தின் முடிவிலும் தம் கண்களால் பார்க்கும்படியாக தர்சனம் கொடுக்கவேண்டுமென்று பகவானை பிரார்த்திக்கிறுர்.]

**कदाचित्कालिन्दीतट विपिन संगीतकवरो**
**मुदा गोपीनारीवदनकमलास्वादमधुपः ।**
**रमाशंभुब्रह्मामरपतिगणेशाचिंतपदो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ १ ॥**

**கதா³சித் காலிந்தீ³தட விபின ஸங்கீ³தகவரோ**
**முதா³ கோ³பீநாரீ வத³ன கமலாஸ்வாத³ மது⁴ப: ।**
**ரமா ஶம்பு⁴ ப்³ரஹ்மாமரபதி க³ணேஶாசிந்தபதோ³**
**ஜக³ந்நாத²: ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 1 ॥**

| | | |
|---|---|---|
| **कदाचित्** கதா³சித் | = | ஒரு சமயம், |
| **कालिन्दीतट विपिन संगीतकवरः** காலிந்தீ³தட விபின ஸங்கீ³தகவர: | = | யமுனை நதிக் கரையோரத்திலுள்ள வனத்தில் சிறந்த பாடகராக விளங்குபவரும், |
| **मुदा** முதா³ | = | சந்தோஷத்துடன், |
| **गोपीनारीवदनकमलास्वादमधुपः** கோ³பீநாரீ வத³ன கமலாஸ்வாத³ மது⁴ப: | = | கோபிகா ஸ்திரீகளின் முககமல மலரின் ரஸத்தைப் பருகும் வண்டாக இருப்பவரும், |

**रमाशंभुब्रह्मामरपतिगणेशार्चितपदः** = லக்ஷ்மீதேவி; சிவன், பிரம்ம தேவன், தேவேந்திரன், கணபதி இவர்களி ஞல் பூஜிக்கப்பட்ட திருவடிகளையுடையவரும்,
**ரமாஶம்பு⁴ப்³ரஹ்மாமரபதி க³ணேஶாசிந்தபத³:**

**स्वामी** = எல்லோருக்கும் யஜமானருமான,
**ஸ்வாமீ**

**जगन्नाथः** = ஜகன்னுதன் என்னும் திருநாமமுடைய பகவான்,
**ஜக³ந்நாத²:**

**मे** = என்னுடைய,
**மே**

**नयनपथगामी** = கண்கள் பார்க்கும் வழியை அடைந்தவராக (கண்களுக்குத் தெரிகிறவராக),
**நயனபத²கா³மீ**

**भवतु** = ஆகவேண்டும்.
**ப⁴வது**

புரீ க்ஷேத்திரத்தில் 'ஜகந்நாதன்' என்ற பெயருடன் விளங்கும் பகவான் எல்லா உலகங்களுக்கும் ஸ்வாமி, யஜமானர் என்பது அவருடைய பெயரிலிருந்தே தெரிகிறது இவர்தான் ஒரு சமயம் கிருஷ்ணுவதாரமெடுத்து யமுநாநதிக்கரையிலுள்ள பிருந்தாவனத்தில் வேணுகானம் செய்தார். நதியின் பிரவாஹம், கரையில் சோலை நிறைந்தவனம் முதலான இயற்கைக் காக்ஷிகளுடன் அழகுற விளங்குமிடத்தில் நடத்திய ஸங்கீதத்தால் தான் மகிழ்ந்ததுடன் எல்லா பிராணிகளையும் மெய்மறக்கச் செய்தார். இந்த வேணுகானத்தால் இழுக்கப்பட்டு அங்கு ஓடிவந்தனர் கோபியர்கள். வண்டுகள் தாமரை மலரின் மகரந்தத்தைப் பருகுவதுபோல அவர்களுடைய தாமரை போல் அழகிய முகத்திலுள்ள அதர ரஸத்தைப்பானம் செய்தார். இவர் இடையராகத் தோன்றியபோதிலும் உண்மையில் ஜகந்நாதரான படியால் லக்ஷ்மி, சம்பு, ப்ரஹ்மா, கணேசர் முதலான எல்லா தேவர்களும் இவருடைய திருவடிகளைப் பூஜிக்கின்றனர். கோபியர்களுக்கு காக்ஷியளித்ததுபோல் எனது கண்களுக்குப் புலப்படும்படி எதிரில் வந்து தோன்றவேண்டும். (1)

**भुजे सव्ये वेणुं शिरसि शिखिपिञ्छं कटितटे**
**दुकूलं नेत्रान्ते सहचरकटाक्षं च विदधते ।**
**सदा श्रीमद्वृन्दावनवसतिलीलापरिचयो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ २ ॥**

**பு⁴ஜே ஸவ்யே வேணும் ஶிரஸி ஶிகி²பிஞ்ச²ம் கடிதடே**
**து³கூலம் நேத்ராந்தே ஸஹசரகடாக்ஷம் ச வித³த⁴தே ।**
**ஸதா³ ஶ்ரீமத்³ப்³ருந்தா³வன வஸதி லீலா பரிசயோ**
**ஜக³ந்நாத²: ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 2 ॥**

**सव्ये भुजे** = இடது கையில்,
**ஸவ்யே பு$^{4}$ஜே**

**वेणुं** = புல்லாங்குழஜலயும்,
**வேணும்**

**शिरसि** = தஜலயில்,
**ஶிரஸி**

**शिखिपिञ्छं** = மயில் தோகை சிறகையும்,
**ஶிகி$^{2}$பிஞ்ச்ச$^{2}$ம்**

**कटितटे** = இடுப்பில்,
**கடிதடே**

**दुकूलं** = பட்டாடையையும்,
**து$^{3}$கூலம்**

**नेत्रान्ते** = கண்களின் ஓரத்தில்,
**நேத்ராந்தே**

**सहचरकटाक्षं** = எப்பொழுதும் சேர்ந்து விளங்கும்
**ஸஹசரகடாக்ஷம்** கடைக்கண் பார்வையையும்,

**विदधते** = (எவர்) தரித்திருக்கிறரோ,
**வித$^{3}$த$^{4}$தே**

**सदा** = எப்பொழுதும்,
**ஸதா$^{3}$**

**श्रीमद्वृन्दावनवसतिलीलापरिचयः** = பெருமைவாய்ந்த பிருந்தாவனத்தில்
**ஶ்ரீமத்$^{3}$ப்$^{3}$ருந்தா$^{3}$வனவஸதிலீலாபரிசய:** வாஸம் செய்வது, க்ரீடிப்பது இவைகளில் பழக்கமுடையவரும்,

**स्वामी** = ஸர்வேச்வரஞயுமுள்ள,
**ஸ்வாமீ**

**जगन्नाथः** = (அந்த) ஜகன்ஞதர்,
**ஜக$^{3}$ந்நாத$^{2}$:**

**मे** = என்னுடைய,
**மே**

**नयनपथगामी** = கண்களுககு விஷயமாகிறவராக,
**நயனபத$^{2}$கா$^{3}$மீ**

**भवतु** = இருக்கவேண்டும்.
**ப$^{4}$வது**

இடதுகையில் புல்லாங்குழலும், சிரஸ்ஸில் மயில்தோகை அலங்காரமும் இடுப்பில் பீதாம்பரமும் தரித்து கடைக்கண் பார்வையால் கோபியர்கஜள அனுக்ர ஹித்துக்கொண்டு எப்பொழுதும் பிருந்தாவனத்தில் வாஸம் செய்து பலவித

லீலைகள் புரிந்த ஜகந்நாத ஸ்வாமி இதே வேஷத்துடன் என் கண்முன் தோன்றி என்னை அநுக்ரஹிக்கவேணும். (2)

**महाम्भोधेस्तीरे कनकरुचिरे नीलशिखरे**
**वसन्प्रासादान्तः सहजबलभद्रेण बलिना ।**
**सुभद्रामध्यस्थः सकलसुरसेवावसरदो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ३ ॥**

**மஹாம்போ$^{4}$தே$^{4}$ஸ்தீரே கனகருசிரே நீலஶிக$^{2}$ரே**
**வஸன் ப்ராஸாதா$^{3}$ந்த: ஸஹஜப$^{3}$லப$^{4}$த்$^{3}$ரேண ப$^{3}$லிநா ।**
**ஸுப$^{4}$த்$^{3}$ராமத்$^{4}$யஸ்த$^{2}$: ஸகலஸுர ஸேவாவஸரதோ$^{3}$**
**ஜக$^{3}$ந்நாத$^{2}$: ஸ்வாமீ நயனபத$^{2}$கா$^{3}$மீ ப$^{4}$வது மே ॥ 3 ॥**

| | | |
|---|---|---|
| **महाम्भोधेः तीरे** <br> **மஹாம்போ$^{4}$தே$^{4}$: தீரே** | = | மஹாஸமுத்திரத்தின் கரையில், |
| **नीलशिखरे** <br> **நீலஶிக$^{2}$ரே** | = | நீலாசலம் என்ற புரிக்ஷேத்திரத்தில், |
| **कनकरुचिरे** <br> **கனகருசிரே** | = | ஸுவர்ணம்போல் ஒளியுள்ள, |
| **प्रसादान्तः** <br> **ப்ரஸாதா$^{3}$ந்த:** | = | தேவாலயத்திற்குள், |
| **बलिना** <br> **ப$^{3}$லிநா** | = | பலத்துடன்கூடிய, |
| **सहजबलभद्रेण** <br> **ஸஹஜப$^{3}$லப$^{4}$த்$^{3}$ரேண** | = | கூடப் பிறந்தபலராமரோடுகூட, |
| **वसन्** <br> **வஸன்** | = | வஸித்துக்கொண்டிருக்கிறவரும், |
| **सुभद्रामध्यस्थः** <br> **ஸுப$^{4}$த்$^{3}$ராமத்$^{4}$யஸ்த$^{2}$:** | = | ஸுபத்ரைக்கும் பலராமருக்கும் நடுவில் இருக்கிறவரும், |
| **सकलसुरसेवावसरदः** <br> **ஸகலஸுரஸேவாவஸரத$^{3}$:** | = | எல்லா தேவர்ளும் தம்மை ஸேவிக்க ஸமயமளிப்பவராயும், |
| **स्वामी** <br> **ஸ்வாமீ** | = | ஸர்வேசுவரனுயுமுள்ள, |
| **जगन्नाथः** <br> **ஜக$^{3}$ந்நாத$^{2}$:** | = | ஜகந்நாதர், |
| **मे** <br> **மே** | = | என்னுடைய, |

| | | |
|---|---|---|
| **नयनपथगामी** <br> **நயனபத²கா³மீ** | = | கண்களின் வழியை அடைகிறவருக, |
| **भवतु** <br> **ப⁴வது** | = | ஆகவேண்டும். |

கிழக்கு ஸமுத்திரக்கரையில் உள்ள புரி க்ஷேத்திரத்திற்கு நீலாசலமென்றும் பெயருண்டு. அங்கு ஸுவர்ணத்தால் கட்டப்பட்டு ஒளியுடன் விளங்கும் தேவாலயத்திற்குள் ஜகந்நாத ஸ்வாமி கூடப்பிறந்தவர்களான பலராமன், ஸுபத்ரை இவர்களுடன் வாஸம் செய்கிறர். இங்கு மனுஷ்யர்கள் மட்டுமல்லாமல் எல்லா தேவர்களும்கூட வந்து முறையாக அந்தந்த ஸமயங்களில் ஸேவித்து அருள் பெறுகின்றனர். இவர் நான் பார்க்கும்படி என் கண்முன் தோன்றட்டும். (3)

**कृपापारावारः सजलजलद श्रेणिरुचिरो**
**रमावाणी सोमस्फुरदमलपद्मोद्भवमुखैः ।**
**सुरेन्द्रैराराध्यः श्रुतिगणशिखागीत चरितो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ४ ॥**

**க்ருபாபாராவாரः ஸஜலஜலத³ ஶ்ரேணிருசிரோ**
**ரமாவாணீ ஸோம ஸ்பு²ரத³மல பத்³மோத்³ப⁴வமுகை²ः ।**
**ஸுரேந்த்³ரை ராராத்⁴யः ஶ்ருதிக³ணஶிகா²கீ³த சரிதோ**
**ஜக³ந்நாத²ः ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **कृपापारावारः** <br> **க்ருபாபாராவாரः** | = | கருஊணக்கடலாக விளங்குபவரும், |
| **सजलजलद श्रेणिरुचिरः** <br> **ஸஜலஜலத³ ஶ்ரேணிருசிரः** | = | நீருண்ட மேக வரிசைபோல் அழகிய காந்தியினுல் பக்தர்களின் மனதிற்கு இன்பம ளிப்பவரும், |
| **रमावाणी सोम** <br> **ரமாவாணீ ஸோம** | = | லக்ஷ்மீ ஸரஸ்வதீ, சந்திரன், |
| **स्फुरदमल** <br> **ஸ்பு²ரத³மல** | = | பிரகாசிக்கும் நிர்மலமான, |
| **पद्मोद्भवमुखैः** <br> **பத்³மோத்³ப⁴வமுகை²ः** | = | தாமரை மலரில் ஆவிர்பவித்த பிரம்மதேவன் முதலிய, |
| **सुरेन्द्रैः** <br> **ஸுரேந்த்³ரைः** | = | தேவ சிரேஷ்டர்களினுல், |
| **आराध्यः** <br> **ஆராத்⁴யः** | = | ஆராதிக்கத்தக்கவரும், |
| **श्रुतिगणशिखागीत चरितः** <br> **ஶ்ருதிக³ணஶிகா²கீ³த சரிதः** | = | வேதக் கூட்டங்களின் சிகைபோன்ற உபநிஷத்துக்களில் புகழப்படும் தனது லீலா விலாஸ காரியங்களை உடையவருமான, |

| | | |
|---|---|---|
| **जगन्नाथः स्वामी**<br>**ஜக3ந்நாத2: ஸ்வாமீ'** | = | ஜகந்நாதஸ்வாமி, |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **नयनपथगामी**<br>**நயனபத2கா3மீ** | = | கண்களுக்குப் புலப்படுகிறவராக, |
| **भवतु**<br>**ப4வது** | = | ஆகவேண்டும். |

ஜகந்நாதர் நீருண்ட கார்மேகம் போன்ற தமது நீல நிற ஒளியால் அழகாக விளங்கிக்கொண்டு பக்தர்களுக்கு இன்பமளிக்கிருர். லக்ஷ்மீ, ஸரஸ்வதி, சந்திரன், பிரம்மதேவன் முதலான தேவ சிரேஷ்டர்களாலும் பூஜிக்கத்தக்கவர் ஸமுத்திரம் போல் எல்லையற்ற தமது கருணையினுல் பக்தர்களின் துன்பங்கள் எல்லாவற்றையும் போக்கிவிடுகிருர். மனதாலும் சிந்தித்துப் பார்க்கமுடியாத அமைப்புக்கொண்ட இவ்வுலகங்கள் எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிப்பவர் என்று வேதாந்தங்களெல்லாம் பகவானின் சரித்திரத்தைப் புகழ்ந்து கூறுகின்றன. இப்பேற்பட்ட ஜகந்நாதர் எனக்கு தர்சனம் கொடுக்கவேண்டும். **(4)**

**रथारूढो गच्छन्पथि मिलितभूदेवपटलैः**
**स्तुतिप्रादुर्भावं प्रतिपदमुपाकर्ण्य सदयः ।**
**दयासिन्धुर्बन्धुः सकलजगतां सिन्धुसुतया**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ५ ॥**

**ரதா2ரூடோ4 க3ச்ச2ன் பதி2 மிலித பூ4தே3வ படலை:**
**ஸ்துதி ப்ராது3ர்பா4வம் ப்ரதிபத3முபாகர்ண்ய ஸத3ய: ।**
**த3யாஸிந்து4ர் ப3ந்து4: ஸகலஜக3தாம் ஸிந்து4ஸுதயா**
**ஜக3ந்நாத2: ஸ்வாமீ நயனபத2கா3மீ ப4வது மே ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **सिन्धुसुतया**<br>**ஸிந்து4ஸுதயா** | = | ஸமுத்திரகுமாரியான லக்ஷ்மியோடுகூட, |
| **रथारूढः**<br>**ரதா2ரூட4:** | = | ரதத்தில் ஏறிக்கொண்டு, |
| **गच्छन्**<br>**க3ச்ச2ன்** | = | செல்லுகிறவருய், |
| **पथि**<br>**பதி2** | = | மார்க்கத்தில், |
| **मिलितभूदेवपटलैः**<br>**மிலித பூ4தே3வ படலை:** | = | ஒருங்குகூடிய பிருமணர்களின் மண்டலங்களினுல், |

| | | |
|---|---|---|
| **स्तुतिप्रादुर्भावं**<br>**ஸ்துதி ப்ராது³ர்பா⁴வம்** | = | ஸ்பஷ்டமாக உச்சரிக்கப்படும் தனது ஸ்துதியான வேதத்தை, |
| **प्रतिपदं**<br>**ப்ரதிபத³ம்** | = | ஒவ்வொரு பதத்தையும் (விடாமல்), |
| **उपाकर्ण्य**<br>**உபாகர்ண்ய** | = | ஆதரவுடன் கேட்டு, |
| **सदयः**<br>**ஸத³ய:** | = | அவ்வந்தணர்களிடம் கருணையுடையவராக விளங்குபவரும், |
| **दयासिन्धुः**<br>**த³யாஸிந்து⁴:** | = | கருணைக்கடலாக இருப்பவரும், |
| **सकलजगतां**<br>**ஸகலஜக³தாம்** | = | எல்லா உலகங்களுக்கும், |
| **बन्धुः**<br>**ப³ந்து⁴:** | = | பந்துபோல் ஹிதம் செய்கிறவரும், |
| **स्वामी**<br>**ஸ்வாமீ** | = | ஸ்வாமியுமான, |
| **जगन्नाथः**<br>**ஜக³ந்நாத²:** | = | ஜகந்நாதர், |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **नयनपथगामी**<br>**நயனபத²கா³மீ** | = | கண்களுக்குக் காண்பவராக, |
| **भवतु**<br>**ப⁴வது** | = | ஆகவேண்டும். |

புரீ க்ஷேத்திரத்தில் நடைபெறும் ரதோத்ஸவம் உலக பிரஸித்தமானது. அதை இந்த சுலோகத்தில் வர்ணிக்கிறார். பகவான் லக்ஷ்மியோடுகூட ரதத்தில் ஆரோஹணித்துக்கொண்டு பக்தர்கள் ரதத்தை இழுக்க அவர்களுக்கு அருள் செய்து கொண்டு செல்கிறார் பிராமணர்களெல்லோரும் கோஷ்டியாகச் சேர்ந்துகொண்டு உரத்த குரலில் ஸ்பஷ்டமாக வேதம் முதலியவைகளால் பகவானை ஸ்தோத்திரம் செய்கிறார்கள். அவர்களிடம் மிகுந்த கருணைகாட்டி அவர்கள் சொல்லும் ஒவ்வொரு பதத்தையும் ஆதரவுடன் கேட்டு அநுக்ரஹம் செய்கிறார் கடல்போல் எல்லையில்லாதது அவர் கருணை. உலகிலுள்ள யாவருக்கும் எல்லா நன்மைகளையும் புரியும் உறவினர் அவர் ஒருவர்தான். அவர் என் எதிரில் வந்து காக்ஷிதரவேண்டும். **(5)**

**परब्रह्मापीडः कुवलयदलोत्फुल्लनयनो**
**निवासी नीलाद्रौ निहितचरणोऽनन्तशिरसि ।**

**रसानन्दो राधासरसवपुरा लिङ्गनसुखो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ६ ॥**

**பரப்³ரஹ்மாபீட³: குவலயத³லோத்பு²ல்ல நயனோ**
**நிவாஸீ நீலாத்³ரௌ நிஹித சரணோ(அ)னந்தஶிரஸி ।**
**ரஸானந்தோ³ ராதா⁴ஸரஸ வபுராலிங்க³னஸுகோ²**
**ஜக³ந்நாத²: ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 6 ॥**

**परब्रह्मा** = தத்வதசையில் பரப்ரம்மஸ்வரூபியாகவும்,
**பரப்³ரஹ்மா**

**अपीडः** = எந்தவிதமான பீடை துக்கமில்லாதவரும்,
**அபீட³:** அல்லது,

**परब्रह्मापीडः** = பரப்ரஹ்மத்தின் ஸகுண உருவங்களில்
**பரப்³ரஹ்மாபீட³:** சிறந்தவரும், பரபிரம்மத்தைத் தனது சிறந்த பிரதிஷ்டையாக உடையவரும்,

**कुवलयदलोत्फुल्लनयनः** = நீலோத்பல புஷ்ப இதழ் போல் மலர்ந்த
**குவலயத³லோத்பு²ல்லநயன:** கண்களையுடையவரும்,

**नीलाद्रौ** = நீலமலையில்,
**நீலாத்³ரௌ**

**निवासी** = வாஸம் செய்பவரும்,
**நிவாஸீ**

**अनन्तशिरसि** = ஆதிசேஷன் தலையில்,
**அனந்தஶிரஸி**

**निहितचरणः** = வைத்துள்ள தனது திருவடிகளை உடையவரும்,
**நிஹிதசரண:**

**रसानन्दः** = சிருங்காரரஸ ஆனந்தத்தை அனுபவிக்கிறவரும்,
**ரஸானந்த³:** ப்ரஹ்மானந்தஸ்வரூபமாக இருப்பவரும்,

**राधासरसवपुरा लिङ्गनसुखः** = ராதையென்னும் ப்ரியநாயிகை ஆவலுடன்
**ராதா⁴ஸரஸவபுரா லிங்க³னஸுக²:** தனது சரீரத்தை வலிய இறுகித் தழுவும் சமயம் அதனால் ஏற்படும் சுகத்தையுடையவரும், அல்லது ராதையின் சரீரத்தை தான் இறுக ஆசையுடன் தழுவி ஆலிங்கனம் செய்வதால் தனக்கும் அவளுக்கும் சுகத்தை உண்டுபண்ணுகிறவருமான,

**जगन्नाथः स्वामी** = ஸ்வாமி ஜகன்னாதர்,
**ஜக³ந்நாத²: ஸ்வாமீ**

**मे नयनपथगामी** = என் கண் முன்புலப்படுபவராக,
**மே நயனபத²கா³மீ**

**भवतु** = ஆகவேண்டும்.
**ப⁴வது**

**परब्रह्म अपीडः परப்³ரஹ்ம அபீட³**ः என்று பதம் பிரித்துக் கூறினுல் பரப்ரஹ்ம ஸ்வரூபி என்பதும் பீடையில்லாதவர் கிலேசமில்லாதவர் என்பதும் பொருள் கிடைக்கிறது. **परब्रह्मणः आपीडः பரப்³ரஹ்மண**ः **ஆபீட³** ः என்று விக்ரஹம் சொன்னுல் பரப்ரஹ்மத்தின் ஸகுண உருவங்களில் சிறந்தவர் என்றும் **परब्रह्म आपीड यस्य सः பரப்³ரஹ்ம ஆபீட³ யஸ்ய ஸ**ः என்று விக்ரஹம் சொன்னுல் பரப்ரஹ்மத்தைத் தனக்குச் சிறந்த ப்ரதிஷ்டையாக, ஆதாரமாக அதிஷ்டானமாகக் கொண்டவர் என்றும் பொருள் கிடைக்கும் சிரோபூஷணத்தைக் கூறும் ஆபீட பதத்திற்கு இங்கு சிறந்தது என்று பொருள் கொள்ளவேண்டும். மலர்ந்த நீலோத்பல மலர்போல் விளங்கும் நேத்ரசோபையுடன் கூடியவர். நீலாத்ரியில், புரீ க்ஷேத்ரத்தில் வஸிப்பவர். தமது பக்தனுன ஆதிசேஷனுக்கு அருள் செய்வதற்காக அவன் சிரஸ்ஸில் தமது பாதங்களை வைத்துக்கொண்டிருக்கிருர். கிருஷ்ணுவதாரத்தில் கோபியர்களுக்கு சிருங்காரரஸ ஆனந்தத்தைக் கொடுத்தவர். **'रसो वै सः' 'ரஸோ வை ஸ**ः**'** ப்ரஹ்மமேரஸம். ப்ரஹ்மானந்த ஸ்வரூபமாக விளங்குகிருர். ராதை ப்ரேமையுடன் தம் சரீரத்தை ஆலிங்கனம் செய்வதாலும், ராதையின் அழகிய சரீரத்தை அன்புடன் தாம் ஆலிங்கனம் செய்துகொள்வதாலும் தாம் ஸுகத்தை யடைவதுடன் அவளுக்கும் ஸுகத்தை அருளுகிருர். அப்பேற்பட்ட ஸ்வாமி ஜகந்நாதர் என் கண் முன்னுல் நான் பார்க்கும்படியாகத் தோன்றட்டும். **(6)**

**न वै प्रार्थ्यं राज्यं न च कनकता भोगविभवो**
**न याचेऽहं रम्यां निखिलजनकाम्यां वरवधूम् ।**
**सदा काले काले प्रमथपतिना गीतचरितो**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ७ ॥**

**ந வை ப்ரார்த்²யம் ராஜ்யம் ந ச கனகதா போ⁴க³விப⁴வோ**
**ந யாசே(அ)ஹம் ரம்யாம் நிகி²லஜனகாம்யாம் வரவதூ⁴ம் ।**
**ஸதா³ காலே காலே ப்ரமத²பதினு கீ³தசரிதோ**
**ஜக³ந்நாத²ः ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 7 ॥**

ஹே ஜகன்னுத!

| | | |
|---|---|---|
| **राज्यं** ராஜ்யம் | = | (மற்றவர்கள் விரும்பும்) ராஜ்யம், |
| **न वै प्रार्थ्यं** ந வை ப்ரார்த்²யம் | = | என்னுல் தங்களிடம் வேண்டுமென்று ப்ரார்த்திக்கத்தக்கதல்ல, |
| **कनकता च** கனகதா ச | = | தங்கக்குவியலும், |
| **न** ந | = | ப்ரார்த்திக்கத்தக்கதல்ல, |

| | | |
|---|---|---|
| **भोगविभवः**<br>**போ⁴க³விப⁴வ:** | = | சுகானுபவப்பெருக்கும், |
| **न**<br>**ந** | = | பிறார்த்திக்கத்தக்கதாக இல்ஐல, |
| **अहं**<br>**அஹம்** | = | நான், |
| **निखिलजनकाम्यां**<br>**நிகி²லஜனகாம்யாம்** | = | எல்லா புருஷர்களாலும் விரும்பத்தக்க, |
| **रम्यां**<br>**ரம்யாம்** | = | மிக்க அழகுவாய்ந்த, |
| **वरवधूम्**<br>**வரவதூ⁴ம்** | = | சிறந்த மணக்கத்தக்க பெண்மணியையும், |
| **न याचे**<br>**ந யாசே** | = | யாசிக்கவில்ஐல, |
| **काले काले**<br>**காலே காலே** | = | ஒவ்வொரு காலத்திலும் (காலம் தவருமல்), |
| **प्रमथपतिना**<br>**ப்ரமத²பதிஞ** | = | ப்ரமத கணங்களுக்கு அதிபதியான பரமசிவ ஞலும், |
| **गीतचरितः**<br>**கீ³தசரித:** | = | புகழப்பட்ட சரித்திரத்தை உடையவரான, |
| **जगन्नाथः स्वामी**<br>**ஜக³ந்நாத²: ஸ்வாமீ** | = | ஜகந்நாதஸ்வாமி, |
| **सदा**<br>**ஸதா³** | = | எப்பொழுதும், |
| **मे**<br>**மே** | = | என்னுடைய, |
| **नयनपथगामी**<br>**நயனபத²கா³மீ** | = | கண்களின் வழியில் செல்பவராக, |
| **भवतु**<br>**ப⁴வது** | = | இருக்கட்டும். |

உலகில் மண்ஞசை, பொன்ஞசை, பெண்ஞசை இம்மூன்று ஆசைகஐளயும் விடுவது மிகவும் கடினம். ஸ்தோத்ரத்தாலும் தவம் முதலியவற்ருலும் பகவானது அருஐளப்பெற்றும் பலர் அவரிடம் மண்ஐணயும் பொன்ஐனயும் பெண்ஐணயும் வரமாகக் கேட்டுஏமாந்து போகின்றனர். எனக்கு அவ்வித ஆசை ஒன்றும் கிடையாது. ராஜ்யத்தையோ, பொன்ஐனயோ, பெண்ஐணயோ, விஷயபோகங்கஐளயோ ஒன்றை யும் வேண்டுமென்று உங்களிடம் நான் பிரார்த்திக்கவில்ஐல ஈசுவரனும் உம்மைப் புகழுகிருர். அவ்வித மஹிமையுள்ள நீர் என் கண்களால் பார்க்கும்படியாக என்

எதிரில் வந்து நின்று தர்சனம் கொடுக்கவேண்டும். எப்பொழுதும் உம்மை தர்சனம் செய்துகொண்டிருப்பதையே நான் விரும்புகிறேன். **(7)**

**हर त्वं संसारं द्रुततरमसारं सुरपते**
**हर त्वं पापानां विततिमपरां यादवपते ।**
**अहो दीनानाथं निहितमचलं पातुमनिशं**
**जगन्नाथः स्वामी नयनपथगामी भवतु मे ॥ ८ ॥**

**ஹர த்வம் ஸம்ஸாரம் த்³ருததரமஸாரம் ஸுரபதே**
**ஹர த்வம் பாபாநாம் விததிமபராம் யாத³வபதே ।**
**அஹோ தீ³நநாத²ம் நிஹிதமசலம் பாதுமநிஶம்**
**ஜக³ந்நாத²: ஸ்வாமீ நயனபத²கா³மீ ப⁴வது மே ॥ 8 ॥**

**हे सुरपते!** = ஹே தேவர்களின் தலைவா!
**ஹே ஸுரபதே!**
**असारं** = ஸாரமற்ற,
**அஸாரம்**
**संसारं** = ஸம்ஸாரபந்த வாழ்க்கையை,
**ஸம்ஸாரம்**
**त्वं** = நீங்கள்,
**த்வம்**
**द्रुततरं** = வெகுசீக்கிரமாக,
**த்³ருததரம்**
**हर** = போக்கவேண்டும்,
**ஹர**
**त्वं** = தாங்கள்,
**த்வம்**
**अपरां** = சிறந்ததாக இல்லாத மிக்கஅதமமான,
**அபராம்**
**पापानां विततिं** = பாபக்கூட்டத்தையும்,
**பாபாநாம் விததிம்**
**हे यादवपते** = ஹே யாதவகுலத்தோர் தலைவா!
**ஹே யாத³வபதே**
**हर** = அழித்துப் போக்கவேண்டும்,
**ஹர**
**अहो** = ஐயோ!
**அஹோ**

**दीनानाथं** = தீனனும் வேறு ரக்ஷகநாதனற்றவனும்,
**தீ³னநாத²ம்**

**अचलं** = கல்லாக அசைவற்று வேறிடம் செல்லாமல்
**அசலம்** உன்னிடமே சரண்புகுந்து,

**निहितं** = நிற்பவனுமான என்னை,
**நிஹிதம்**

**अनिशं** = எப்பொழுதும்,
**அநிஶம்**

**पातुं** = ரக்ஷிப்பதற்கு,
**பாதும்**

**स्वामी** = ஸ்வாமியான,
**ஸ்வாமீ**

**जगन्नाथः** = ஜகந்நாதர்,
**ஜக³ந்நாத²:**

**मे** = என்னுடைய,
**மே**

**नयनपथगामी** = கண்களின் வழியை அடைந்தவராக,
**நயனபத²கா³மீ**

**भवतु** = இருக்க வேண்டும்.
**ப⁴வது**

இப்பிரபஞ்சத்தில் சரீரத்துடன் பிறப்பது, சில நாட்கள் வாழ்வது, பிறகு இறப்பது மறுபடியும் பிறப்பது. இதுதான் ஸம்ஸாரமென்பது இதில் ஸாரமே கிடையாது. ஸுகமுமில்லை. இதுவாஸ்தவமுமல்ல ஆனாலும் மாயையால் மயக்க முற்று இதில் ஆழ்ந்து தீனனாகத் தவிக்கிறேன். என்னைக்காப்பாற்ற உம்மைத் தவிற வேறு யாருமில்லை. ஒரு இடமும் செல்லத்தெரியாமல் கல்லுப்போல அசைவற்று உட்கார்ந்துகொண்டிருக்கிறேன். தாங்கள் தான் எனக்கு தரிசனம் கொடுத்துக் காப்பா ற்ற வேண்டும். இச்சம்ஸார வாழ்க்கைக்கு மூலகாரணமாக என்னிடம் குவிந்துள்ள பாபக்கூட்டங்களையெல்லாம் போக்கி ஸம்ஸார வாழ்வைத் தொலைத்து பிறப்பு இறப்பற்ற நிலையை அருளவேண்டும். **(8)**

## ஜக³ந்நாதா²ஷ்டகம் முற்றும்.